5th February 1959]

SRI A. VEDARATHNAM : இப்போது, இதுவரை திறக்கப்பட்டிருக்கும் அத்தனை கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்களா? அப்படி இல்லையானால், டாக்டர்கள் இல்லாத ஆஸ்பத்திரிகளுக்கெல்லாம் டாக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அனேகமாக எல்லா கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒன்றிரண்டு இடங்களில் போதுமான டாக்டர்கள் கிடைக்காமல் இருக்கலாம். டாக்டர்கள் பற்றாக்குறை இருக்கிறது. இதை சமாளிப்பதற்கு "ஸ்டாக்மென்" இருக்கவேண்டும்.

SRI M. K. SOMASUNDARAM : கால்நடை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்ற பிரச்னை பெருவாரியாக இன்னும் இருந்து வருகிறது. எனவே, உத்தியோகத்தை விட்டுவிட்டு வெளியேறும் டாக்டர்களை கட்டாயமாக இந்த ஆஸ்பத்திரிகளில் நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கால்நடை டாக்டர்களின் நிலைமை மனிதர்களுக்கு வைத்தியம் பார்க்கும் டாக்டர்களின் நிலைமையைப் போன்றது அல்ல. கால்நடை டாக்டர்களுக்கான பரீக்ஷை பாஸ் பண்ணினவர்கள் இந்த ஸ்தாபனங்களில் வேலைக்கு வந்துதான் ஆகவேண்டும். அவர்களுக்கு தனியாக உத்தியோகம் கிடைப்பதில்லை. வேண்டுமானால், அவர்கள் வேறு ராஜ்யங்களுக்குப் போகலாம். கிடைக்கும் கால்நடை டாக்டர்களைக் கொண்டு இந்த ஆஸ்பத்திரிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

*23 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

S.P.C.A. உள்ள இடங்களிலெல்லாம் கால்நடை ஆஸ்பத்திரிகள் வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Regular veterinary institutions (either veterinary hospital or veterinary dispensary) are functioning already at all places where S.P.C.A. are functioning, except Ayyampet. The veterinary dispensary at Papanasam which is only at a distance of five miles serves the needs of Ayyampet.

SRI M. KALYANASUNDARAM : : மாடுகள் வைத்துக் கொண்டிருக்கும் விவசாயிகளுக்கு S. P. C. A. ஸ்தாபனத்தால் நன்மையை விடத்தீமைதான் அதிகமாக ஏற்படுகிறது என்பதை சர்க்கார் அறிவார்களா ? அந்தக் காரணத்தால் இந்த ஸ்தாபனத்தை சர்க்கார் மூடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினரைப் போன்ற ஒரு சிலர் இம்மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அது சரி அல்ல.

### *Hindi*

*24 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாநில ஆரம்பப் பள்ளிகளில் ஹிந்தி எந்த வகுப்பிலிருந்து போதிக்கப்படும் ?

(ஆ) எல்லா மாணவர்களுக்கும் போதிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Hindi will not be taught in any of the standards in elementary schools.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : ஆரம்பப் பள்ளிகளில் ஆங்கிலம் போதிக்கப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்திற்குக் கொடுத்திருக்கும் அந்த அளவு சலுகையையாவது நம் தேசீய மொழியாகிய ஹிந்திக்குக் கொடுக்க அரசாங்கம் முன் வருமா ? அதைப் பற்றி அரசாங்கம் ஆலோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மொழிப் பிரச்னை சம்பந்தமாக எல்லோரும் கலந்தாலோசித்து ஒரு திட்டத்தை வகுத்திருக்கிறோம். அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவது தான் அரசாங்கத்தின் கொள்கை.

*Allotment of poramboke lands to Harijans*

*25 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri M. C. Muthukumaraswamy) : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலூக்காவில் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கியுள்ள ரெவின்யூ புறம்போக்கு நிலங்களின் விஸ்தீர்ணம் என்ன ?

(ஆ) அவைகளில் ஹரிஜனங்களின் உபயோகத்திலுள்ள நிலங்களின் விஸ்தீரணம் எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No cultivable poramboke land has been reserved for the Harijans but an extent of 9·61 acres of Natham poramboke has been reserved for the provision of house-sites to the Harijans.

(*b*) Out of an extent of 9·61 acres of Natham poramboke an extent of 5·54 acres of land is under the occupation of the Harijans.

SRI K. B. S. MANI : தஞ்சாவூர் ஜில்லாவில் குடியிருப்புப் பிரச்னை மிக நெருக்கடியான நிலையில் இருப்பதற்குக் காரணம், அந்த ஜில்லாவில் எல்லா நிலங்களும் மடாலயங்களுக்கே சொந்தமாக இருப்பது தான். எனவே அங்கே சர்க்கார் புறம்போக்கு நிலங்களில் ஹரிஜனங்கள் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு எவ்விதத் தடையும் இல்லாதபடி முன் கூட்டியே ஒரு உத்தரவு போட சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சர்க்கார், தங்களுக்குச் சொந்தமான நிலங்கள் உள்ள இடங்களில் அவைகளை ஹரிஜனங்களுக்கு தாராளமாகத்தான் கொடுக்கிறார்கள். அவை போதிய அளவில் இல்லை. ஆகையால் நிலங்களை acquire செய்து ஹரிஜனங்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அவ்வாறு acquire செய்யப் பட்டுள்ள இடங்களுக்குச் செல்ல ஹரிஜனங்கள் மறுக்கிறார்கள்.

SRI K. B. S. MANI : அது வாஸ்தவமே. ஹரிஜனங்கள் அந்த இடங்களுக்குப் போகாததற்குக் காரணம் அந்த இடங்கள் பள்ளங்களிலோ ஆற்றுப் படுகைகளிலோ இருப்பது தான்; acquire பண்ணப்பட்டுள்ள இடங்கள் மிக மோசமாகவும் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு ஏற்றவையாக இல்லாமலும் இருக்கின்றன. இந்தக் காரணங்களால் தான் அவர்கள் அந்த இடங்களுக்குப் போகவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அந்த இடங்கள் ஜில்லா அதிகாரிகளால் பார்வையிடப்பட்டு இந்த விஷயங்கள் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றனவா ? அப்படியானால் அவைகளை ரத்து செய்துவிட்டு வேறு இடங்களை acquire செய்து ஹரிஜனங்களுக்குக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?